உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - ஆவணி - 2018 - ஆகஸ்ட் இதழ் - 74

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

அணிசுமந்த மயிலாளை ஆனந்த பைரவியை
ஆடகப்பொன் மேருமகள் ஆனாள் தம்மை
அரவசைசெஞ் சடையானை ஆரணங்கள்
அறியானைத் தெளியானை அன்பினாலே
மணிசுமந்த திருமார்பால் மருவியபா கீரதியை
மாமதுரை நாடாளும் மகிமை யாளை
மதிசுமந்த பெருமானை மறக்கா நெல்லை
மாதரசி மங்கலையை மலர்பாய் வைகைப்
பணிசுமக்க மண்சுமந்த பரமசிவன் பத்தினியைப்
பனிசுமந்த தலையனுக்கு மதுரை தந்த
பங்கயத்தை மலர்முகத்துப் பாவை யாளைக்
பாவலர்தம் கவிசுமந்த பான்மை யாளைக்
கண்சுமந்த கடவுளுடன் சமிவனத்தைக் காத்துவரும்
சங்கரியைத் திருநெல்லை என்னும் தாயைச்
சரிபாதி உடல்பெற்ற சார்பி னாளைச்
சஞ்சலங்கள் அகலவெனச் சாற்று நெஞ்சே!

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

'ஆணவம்' யார் மனதிலும் எந்தச் சமயத்திலும், எந்த ரூபத்திலும் நுழையலாம். நுழைந்து ஆட்கொண்டு ஆக்கினைப் படுத்தலாம்.

செல்வக் கர்வம், தொழிற் கர்வம், புகழ்க் கர்வம், வெற்றிக் கர்வம், வித்யா கர்வம், அறக் கர்வம், பக்திக் கர்வம், தொண்டில் கர்வம் எனப் பலவகை. இதில் ஒன்றாவது இடம் பெறாத 'மனித மனம்' இல்லை என்றே கூறலாம்.

எல்லாக் கர்வங்களிலும் மிக மோசமானது வித்யா கர்வம். எனக்கு எல்லாம் தெரியும் என்கிற மனப்பாங்கு. இன்னும் மேலே நான் என்ன சொன்னாலும் பலிக்கும், நினைத்தாலும் பலிக்கும் என்கிற தனது சக்தியிலே உள்ள கர்வம். மனிதன் தன் வாக்கினாலோ, சக்தியினாலோ பிறருடைய எல்லாத்துயரங்களையும் மாற்றிவிட முடியும் என்று எண்ணுவது மிகப் பெரிய தவறு. என் ஆசீர்வாதத்தாலே அவன் துயர் நீங்கியது என்று கருதுவது பேதமை.

குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் 'நாம் ஆசீர்வதிப்போம். நம் குருமார்கள் நம் சிஷ்யன் சொல்லிவிட்டானே என்று நம் வாக்கைக் காப்பாற்றுவார்கள்' என்று சொல்வார்கள். நம் மனத்தூய்மையோடு பரம்பொருளை நம்பி ஆசீர்வதிக்கின்ற ஆசீர்வாதங்களுக்குப் பயன் உண்டு. நம் சாபத்தால் ஒருவருக்குத் தீங்கு வந்தது என்று எண்ணுவதும் பேதமை. நல்ல மனம் உடைய பெரியவர்கள் நெஞ்சிலே சாபம் கொடுக்க வேண்டும் என்ற எண்ணமோ, நான் கொடுத்தால் பலிக்கும் என்ற எண்ணமோ தோன்றாது.

ஒரு நல்ல ஆசிரியர் எப்படித் தன்னைக் கேலி செய்யும்

மாணவர்களும் நல்லவர்களாக மாற வேண்டும், நன்கு வளர்ச்சி பெற வேண்டும் என்று எண்ணுவாரோ அதைப் போல எல்லோரும் எண்ண வேண்டும், ஆசைப்பட வேண்டும்.

நம் ஐந்தாம் பட்டம் வீரப்ப சுவாமிகள் மேன்மையான ஆத்மா. காஞ்சிப் பெரியவராலேயே 'ஞானி' என்று போற்றப்பட்டவர்கள். அவர்களுக்கு வாக்குப் பலிதம் உண்டு. நல்லது சொன்னாலும் நடக்கும்; அல்லது சொன்னாலும் அப்படியே நடக்கும். ஒரு கால கட்டத்தில் "தன் மனம் சினம் வயப்படுகிறது. அதனுடைய தாக்கம் அடுத்தவர்க்குக் கேடு விளைவிக்கிறது" என்ற எண்ணம் வந்தது. உடனேயே தன் கோபத்தைக் குறைத்துக் கொள்வதற்காகவே 'திருக்களர் பாரிஜாதவனேஸ்வரர்' திருக்கோவிலில் தவம் செய்து கோபத்தைத் துறந்தார்கள்.

அவர்களைப் போல் நம் மனதைத் தூய்மைப் படுத்திக்கொள்வோம். என்னாலே ஆக்கவும் முடியும், அழிக்கவும் முடியும் என்ற அகம்பாவம் தவிர்த்துச் சாந்தம் அடைவோம். ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் பரம்பொருளாலே மட்டும் முடியும். எனவே அகந்தை தவிர்ப்போம். மனத்தூய்மை பெறுவோம். சாந்தம் அடைவோம். ஆசீர்வாதங்கள் !

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*



## அதிமதுர கவிகள் *(தொடர்ச்சி)*

காப்பியக்கவிஞர் நா. மீனவன்

திருமலைராயன் அவையில் இருந்த தண்டிகைப் புலவர்கள் கேட்ட பல சமிக்ஞைகளுக்கு. (குறிப்பு) காளமேகம் தொடர்ந்து பாடுகின்றார்.

**நீறும் நெருப்பும் :**

நீறையும் நெருப்பையும் ஒன்றுபடுத்தி ஒரு கவி சொல்லுக! என்று ஒரு புலவர் கேட்க ஆசுகவியான காளமேகம் கீழ்க்காணும் வெண்பாவைப் பாடுகிறார்.

***நீறாவாய் நெற்றி நெருப்பாவாய் அங்கமிரு***
***கூறாவாய் மேனி கொளுத்தவாய் - மாறாத***
***நட்டமா வாய்சோறு நஞ்சாவாய் நாயேனை***
***இட்டமாய்க் காப்பாய் இனி.***

நெற்றியிலே திருநீரு அணிந்திருப்பாய். மேனி நெருப்பாக வீற்றிருப்பான். (திருமாலும் நான் முகனும் அடிமுடி தேடிய போது சிவன் நெருப்பு வடிவமாய் நின்ற வரலாறு). சிவனுடைய திருமேனியின் இடப்பாகத்தில் உமையவள் பாதி பெற்றாள். அதனால் அங்கம் இரு கூறானது என்று கூறுகின்றார். சிவனை எரிதழல் மேனியன் என்பதால் மேனி கொளுத்துவாய் என்று கூறுகின்றார். இடைவிடாமல் நடனம் ஆடுவதால் மாறாத நட்டம் உடையவன் எனப்பட்டான். தேவர்க்காகப் பாற்கடலைக் கடைந்த போது ஆலகாலம் என்ற நஞ்சு வெளிப்பட்டது. அதனைச் சிவபெருமான் உண்டமையால் நஞ்சு சோறாயிற்று. இத்தகைய இயல்புடைய நீ என்னைக் காப்பாயாக! என்று பாடி முடித்தார்.

**கங்கை அடங்கும் :**

அடுத்த புலவர் காளமேகத்தை நோக்கி குடத்திலே கங்கை அடங்கும் என்ற ஈற்றடியைக் கொடுத்துப் பாடுக என்றார். காளமேகம் உடனே பாடத் தொடங்கினார். அப்பாடல் இதுதான்

***விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்***
***மண்ணுக் கடங்காமல் வந்தாலும் - பெண்ணை***
***இடத்திலே வைத்த இறைவர் சடாம***
***குடத்திலே கங்கை அடங்கும்***

சூரிய குலத்திலே தோன்றிய பகீரதன் என்ற வேந்தன் சாகரத்தைத்

தோண்டிய தன் முன்னோர் ஆயிரவரும் முனிவர் சாபத்தால் சாம்பலாயினர். அவர்கள் வழி பகீரதன் நற்கதி அடைய வழி என்னவென்று கேட்ட பொழுது ஆகாயத்திலே இருந்து கங்கையை வரவழைத்தால் அந்த நீரால் அவர்கள் நற்கதி அடைவார்கள் என்றனர். அதனால் பகீரதனும் கங்கையை நோக்கித் தவமிருந்த காலை கங்கை அவன்முன் தோன்றி, நான் பூமியை நோக்கி இறங்கும் பொழுது என் வேகத்தைப் பூமி தாங்காது என்றாள். இதற்கு வழி என்னவென்று முனிவர்களைக் கேட்ட பொழுது அவர்கள் சிவபெருமான் ஒருவர்தான் அவள் வரும் வேகத்தைத் தாங்கும் சக்தி படைத்தவர் என்றனர். பகீரதனும் தவமிருந்து சிவனை வேண்ட அவரும் விரிந்த சடையுடன் நின்றார். பூமியை நோக்கி அதி வேகத்துடன் இறங்கிய கங்கையைத் தன்னுடைய சடையாகிய மகுடத்திலே அடக்கி விட்டார் என்ற வரலாறே மேற்கண்ட வெண்பாவின் பொருளாகும்.

வானத்திலும் அடங்காமல் மலைகளுக்கும் அடங்காமல் மண்ணுக்கும் அடங்காமல் மலைமகளாகிய பெண்ணைத் தன்னுடைய இடப்பாகத்திலே வைத்த சிவனின் சடையாகிய மகுடத்திலே கங்கை நதி அடங்கியது என்பதே கருத்து. சடா-ம-குடம்.

**ஆறு தலை :**

மற்றொரு புலவர் எழுந்து. முருகன் பிள்ளையார் திருமால். சிவனடியார் இவர்களுக்குத் தனித் தனியே ஆறுதலை உண்டு என்ற பொருள்படி ஒரு வெண் பாவைப் பாடும் என்றதும் காளமேகம் பாடிய வெண்பா இது.

*சங்கரற்கும் ஆறுதலை சண்முகற்கும் ஆறுதலை*
*ஐங்கரற்கும் ஆறுதலை ஆனதே - சங்கைப்*
*பிடித்தோர்க்கும் ஆறுதலை பித்தா நின்பாதம்*
*படித்தோர்க்கும் ஆறுதலைப் பார்.*

சங்கரன் ஆகிய சிவனுக்குக் கங்கை ஆறு தலையில் உள்ளது. சண்முகன் ஆகிய முருகனுக்கு ஆறு தலை உண்டு. ஐங்கரன் ஆகிய பிள்ளையாருக்கு மனித உடலிருந்தும் மாறு தலையாகிய யானைத் தலை உள்ளது. சங்கைப் பிடித்த திருமாலுக்குத் தலைப்பக்கத்தில்

ஆறு உள்ளது. (திருவரங்கத்தில் காவிரி இருப்பது பித்தனாகிய சிவனின் திருவடிகளைப் போற்றிப் படித்தோர்க்கும் ஆறுதலை உண்டு. (ஆறுதலை - ஆறு - தலை ஆறுதல்)

**முக்கண்ணனுக்கு அரைக்கண் :**

அடுத்து ஒரு புலவர் காளமேகத்தை நோக்கி. முக்கணனுக்கு அரைக்கண் என்ற பொருளில் ஒரு வெண்பாப் பாடுக என்றதும் காளமேகம் பாடிய பாடல் இது.

***முக்கண்ணன் என்(று) அரனை முன்னோர் மொழிந்திடுவர்***
***அக்கண்ணற்(கு) உள்ள(து) அரைக்கண்ணே - மிக்க***
***உமையாள்கண் ஒன்(று) அரை மற்(று) ஊன்வேடன் கண்ஒன்(று)***
***அமையும்இத னால்என்(று) அறி.***

முக்கண்ணன ஆன சிவனின் இடப்பாகத்தில் உமையவள் இருப்பதால் அரைப்பகுதி மூன்று கண்களில் பாதி ஒன்றரை ஆகும். கண்ணப்ப நாயனார் தம்முடைய ஒரு கண்ணைத் தோண்டி அப்பினார். ஆதலால் எஞ்சியது அரைக்கண் ஆகும். இதுவே இதன் பொருள். வியப்பாகவும் சமத்காரமாகவும் பாடிய விந்தையால் காளமேகத்தின் கவியாற்றல் எத்தகையது எனப் புரிந்து கொள்ளலாம்.

**சிதம்பர தேவா :**

அடுத்து ஒரு புலவர் காளமேகத்தைப் பார்த்து. சிதம்பர தேவா என்ற தொடர் நான்கு முறை வருமாறு ஒரு வெண்பாப் பாடும் பார்க்கலாம் என்றார். உடனே காளமேகம் பாடிய வெண்பா இது.

*அரகர திருச்சிற் றம்பல வாணாஅந்*
*தர்ரூ பமகே சசிதம் - பரேத*
*வசிதம் பரதே வசிதம் பரதே*
*வசிசிதம் பரதே வனே.*

அரகர திருச்சிற்றம்பல வாணனே! வானத்தை மேனியாக உடையவனே! மகேசனே சிதம்பரத்தில் உள்ள தேவனே! சிதம்பர தேவா! சிதம்பர தேவனே! இதில் சிதம்பர தேவனே என்ற தொடர் நான்குமுறை வந்திருப்பதைக் காணலாம்.

**கின்னரி வாசிக்கும் கிளி :**

கின்னரி வாசிக்கும் கிளி என்பதை ஈற்றடியாகக் கொண்டு ஒரு வெண்பாப் பாடுக! என்று ஒரு புலவர் கேட்க உடனே காளமேகம் பாடிய பாடல் இது.

கூடல் நகராகிய மதுரையம் பதியில் சிவபெருமான் நிகழ்த்திய திருவிளையாடலும். அவனது கருணைத் திறமும் காளமேகத்தின் நினைவுக்கு வர அதனை அமைத்துப் பாடத் தொடங்கினார்.

***ஆடல்புரிந் தான்என்றும் அந்நாளி லேமூவர்***
***பாடல்உகந் தான்என்றும் பான்மையினால் - கூடலிலே***
***நன்னரி வாசிக்கு நடைபயிற்றி னான் என்றும்***
***கின்னரி வாசிக்கும் கிளி.***

சிவன் முன்பு ஆலவாயாகிய கூடல்மா நகரில் பல திருவிடையாடல்களைச் செய்தான் என்றும் அப்பர் சம்பந்தர் சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தான் என்றும் நரிகளைக் குதிரைகளாக்கி அவற்றிற்கு நடை கற்பித் தான் என்றும் அவற்றைச் செய்தவன் சிவபெருமானே என்று கின்னரி என்ற இசைக் கருவியை வாசித்தது கிளி என்பதே இதன் பொருள். (கின்னரி என்பது வீணையில் ஒரு வகை இசைக்கருவி)

**நா.நீ.நு.நே :**

இன்னொரு புலவர் எழுந்து நா.நீ.நு.நே என்ற எழுத்துக்கள் வரும்படியாக ஒரு வெண்பாப் பாடுக என்றார். உடனே காளமேகம் பாடிய வெண்பா இது.

***அரையில் முடியில் அணிமார்பில் நெஞ்சில்***
***தெரிவை இடத்(து) அமர்ந்தான் சேர்வை - புரைஅறவே***
***மானார் விழியீர் மலரணைஒற்(று) ஈறாகும்***
***ஆனால்நா நீநூ நே.***

இப்பாடல் பெண்களை முன்னிலைப் படுத்திப் பாடுவது போல் சொல்லப்பட்டது. மான் போன்ற மருண்ட கண்களை உடைய பெண்களே! மலரண என்பவற்றின் ஒற்றுக்களான ம்.ல்.ர்.ண். என்பவை நா.நீ.நூ.நே என்பவற்றின் இறுதியாகத் தலை கீழாக

நேம்.நூல்.நீர்.நாண் என்றாற் போல ஆகி வருமானால் உமையவள் தன் இடப்பாகத்தில் வீற்றிருத்தலை விரும்பிய சிவனின் அரையிலும் (இடுப்பு) முடியிலும் அழகிய மார்பிலும் நெஞ்சிலும் குற்றமறச் சேர்க்கப்படவதற்கு உரியனவாகும் என்பதே பொருள்.

**சோகாமா ஏவாதா :**

திருமலைராயன் அவையில் இருந்த வேறு ஒரு புலவர் காளமேகத்தை நோக்கி சோகாமா ஏவாதா என்ற சொற்களுடன் தொடங்கும் வெண்பாவைப் பாடுக என்று கேட்டதும் காளமேகம் பாடிய வெண்பா.

*சோகாம ஏவாதா சொல்லினமனைக் கூட்டியுமை*
*பாகார்ந்த தில்லைப் பரமேசா - வாகாய்த்*
*தரித்தார் எரித்தார் தறித்தார் உதைத்தார்*
*உரித்தார் கணைபடைத்தார் ஊர்க்கு*

உமையவளைத் தம் இடப்பாகத்தில் கொண்ட தில்லை பரமேசுவரன். சோகாமா ஏவாதா என்பவற்றோடு மன் என்ற சொல்லைக் கூட்டிச் சொன்னால் அழகாய்த் தரித்து சோமன் (சந்திரன்) காமனை (மன்மதனை) எரித்தார். மாமனாகிய தட்சணைக் கொன்றார். எமனை உதைத்தார்; யானையின் தோலை உரித்தார். முப்புரங்களை அழிக்கும் பொருட்டு திருமாலைக் (தாமன்) கணைகளைப் படைத்தார் என்று பொருள்படும்.

**கொட்டைப் பாக்கு - களிப்பாக்கு :**

இன்னொரு புலவர் எழுந்து கொட்டைப் பாக்கு என்று தொடங்கிக் களிப்பாக்கு என்று முடியும்படி ஒரு வெண்பாப் ப்டுக என்றதும் காளமேகம் பாடிய வெண்பா இது.

*கொட்டைப்பாக் கும்ஒருகண் கூடையைப்பாக் கும்மடியில்*
*பிட்டைப்பாக் கும்பாகம் பெண்பாக்கும் - முட்டநெஞ்சே*
*ஆரணனும் நாரணனும் ஆதிஅறை யும்தேடும்*
*காரணனைக் கண்டுகளிப் பாக்கு.*

நெஞ்சிற்குச் சொல்லுவது போல வெண்பா அமைந்துள்ளது. நெஞ்சமே! மதுரையில் வைகையாற்றில் பெருவெள்ளம் வந்த பொழுது

வந்தி என்பவளுக்காக அவளின் வேண்டுகோட்படி மண் சுமக்கச் சென்ற பொழுது மண்வெட்டியைப் பார்த்திருந்தவனும். தன் மடியில் இருக்கும் அவள் கொடுத்த பிட்டைப் பார்த்திருந்தவனும். பழைமையான நால்வேதங்களும். நான் முகனும் திருமாலும் தேட இருப்பவனும் ஆகிய பரமசிவனைக் கண்டு வணங்குவோர்க்குக் களிப்பை உண்டாக்குவாயாக! பார்க்கும் என்ற சொல் பாக்கு என மருவி வந்துள்ளது.

*(தொடரும்...)*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

காற்றடைத்த பையாக விளங்கும் இந்த உடலை நிலையானது என்று நம்பி வாழ்வதை விடுத்துச் சிற்றின்பத்தை நுகரும் மாய வாழ்வை எண்ணாது இறைவனை நாடி வாழும் பேரின்ப வாழ்வை நம்ப வேண்டும் எனப் பட்டினத்தார் பலமுறை வற்புறுத்திப் பாடுகிறார்.

பட்டினத்தார் வாழ்க்கையில் ஒரு வேந்தர் குறுக்கிட்டார். அவருடைய மாலை களவு போய்விட்டது. அதனைத் தேடிக் காவலர்கள் நாலா பக்கமும் சென்றனர். காவலர் விரட்டி வருவதைக் கண்ட கள்வர்கள் ஓரிடத்தில் கண் மூடித் தியானத்தில் இருந்த பட்டினத்தார் கழுத்தில் போட்டுவிட்டுப் போயினர். அங்கு வந்த காவலர் அவரே திருடர் என்று கருதிச் சிறைப்பிடித்து அரசன் முன் நிறுத்தினர். அரசன் அவரைக் கழுவில் ஏற்றுமாறு ஆணையிட்டான். பட்டினத்தார் இறையை எண்ணிப் பாடினார். கழுமரம் தீப்பற்றி எரிந்தது. இச்செய்தியை அறிந்த அரசன் பட்டினத்தாரை விடுவித்து அவருடைய சீடராகித் துறவு பூண்டார். பல தலங்களுக்கும் சென்றார். பட்டினத்தாரைப் போல் அவரும் நிலையாமை குறித்தப் பலவாறு பாடுகின்றார். அவற்றை இனிக் காணலாம். அவர் பாடிய எக்காலக் கண்ணிகளைப் பார்ப்போம்.

**காப்பு**

முத்தியைத் தருகின்ற ஞானவழி வேண்டுமென்று நான் புலம்பும் புலம்பலைச் சொல்லும்படி யானை முகத்தான் அருளை நான் பெறுவது எக்காலம்?

காப்பு

முத்திதரும் ஞானமொழியாம் புலம்பல் சொல்ல அத்தி முகவன் அருள் பெறுவது எக்காலம்?

நூல் ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவது எக்காலம்? 1

*பொருள்* - நான் என்ற ஆணவத்தை அடக்கி ஐம்புலன்களால் வரும் உணர்வுகளை நீக்கித் தூங்காமல் பேரின்பமாகிய சுகத்தை நான் பெறுவது எக்காலம்? மெய் வாய் மூக்கு செவி என்ற ஐம்புலன்களால் வரும் உணர்வுகளை நீக்கிட வேண்டும்.

நீங்காச் சிவலோக நித்திரைகொண்டே இருந்து
தேங்காக் கருணைவெள்ளம் தேங்குவதும் எக்காலம்? 2

*பொருள்* - தடைப்படாதவாறு கண்மூடித் தியானத்தில் இருக்கின்ற சிவலோக நித்திரையில் இருந்து அச்சிவனுடைய கருணை வெள்ளத்தை நான் உள்ளத்திலே தேக்கி வைத்துக் கொள்வது எக்காலம்?

தேங்காக் கருணைவெள்ளம் தேக்கி இருந்து உண்பதற்கு
வாங்காமல் விட்டகுறை வந்(து) அடுப்பது எக்காலம்? 3

*பொருள்* - உள்ளத்தில் நிலையாக இருக்காத கருணை வெள்ளத்தை உள்ளத்தில் வாங்காமல் விட்டகுறை நிங்கி அந்தக் கருணை வெள்ளம் என்னை வந்த அடைவது எக்காலம்?

ஓயாக் கவலையினால் உள்ளுடைந்து வாடாமல்
மாயாப் பிறவி மயக்(கு) அறுப்பது எக்காலம்? 4

*பொருள்* - நீங்காத கவலையினால் உள்ளம் உடைந்து வாடாமல் மாயாத பிறவியினால் வரும் மயக்கத்தை நீக்கி வாழ்வது எக்காலம்?

மாயாப் பிறவி மயக்கத்தை ஊடறுத்துக்
காயா புரிக்கோட்டை கைக்கொள்வது எக்காலம்? 5

*பொருள்* - காயம் என்று சொல்லும் இந்த உடம்பை என் வசமாக நன்னெறியில் செலுத்தும் நிலை என்னை வந்து அடைவது எக்காலம்?

காயா புரிக்கோட்டை கைவசமாய்க் கொள்வதற்கு
மாயா அனுபூதி வந்(து) அடுப்பது எக்காலம்? 6

*பொருள்* - இந்தக் காயமாகிய உடம்பென்னும் கோட்டையை என் வசமாய்க் கைக்கொள்வதற்கான நெறியாகிய அனுபூதி என்னை வந்து அடைவது எக்காலம்?

சேயாய்ச் சமைந்து செவி(டு) ஊமை போல்திரிந்து
பேய்போல் இருந்(து) உன் பிரமை கொள்வ(து) எக்காலம்? 7

*பொருள்* - குழந்தை போலாகிச் செவிடாக ஊமையாகத் திரிந்து பேய்போல் அலைந்து இறைவா உன் அருளைப் பெறுவது எக்காலம்?

பேய் போல் திரிந்து பிணம்போல் கிடந்து பெண்ணைத்
தாய்போல் நினைத்துத் தவம் முடிப்ப(து) எக்காலம்? 8

*பொருள்* - பேய் அலைவது போல் அலைந்து பிணம் போல் அசையாமல் கிடந்து பார்க்கின்ற பெண்களைப் பெற்ற தாய்போல் எண்ணி நான் செய்யும் தவத்தை முடிப்பது எக்காலம்?

கால்காட்டிக் கைகாட்டிக் கண்கள் முகம்காட்டி
மால்காட்டும் மங்கையரை மறந்(து) இருப்ப(து) எக்காலம்? 9

*பொருள்* - காலைக் காட்டிக் கைகளைக் காட்டி கண்களையும் முகத்தையும் காட்டி மயக்கும் பெண்களை மறந்து நான் தனித்திருப்பது எக்காலம்?

பெண்ணின் நல்லார் ஆசைப் பிரமையினை விட்(டு) ஒழித்த
கண் இரண்டும் மூடிக் கலந்திருப்பது எக்காலம்? 10

*பொருள்* - பெண்களின் மேல் உண்டாகும் ஆசை என்னும் மயக்கத்தை விட்டு ஒழித்துக் கண்களை மூடி மோனநிலையில் இருப்பது எக்காலம்?

வெட்டுண்டு புண்போல் விரிந்த அல்குல் பைதனிலே
தட்டுண்டு நிற்கை தவிர்வதும் எக்காலம்? 11

*பொருள்* - வெட்டுப்பட்ட புண்போல் விரிந்து விளங்கும் பெண்களின் அல்குல் மேல் ஆசை கொண்டு நிற்கின்ற நிலை மாறுவது எக்காலம்?

ஆறாத புண்ணில் அழுந்திக் கிடவாமல்
தேறா சிந்தைதனைத் தேற்றுவதும் எக்காலம்? 12

*பொருள்* - ஆறாத புண்போல விளங்கும் பெண்குறிமேல் ஆசை கொண்டு அதிலே மூழ்கிக் கிடவாமல் சிந்தை தேறுவது எக்காலம்?

தந்தை தாய் மக்கள் சகோதரரும் பொய்யெனவே

சிந்தைதனில் கண்டு திருக்(கு) அறுப்பது? எக்காலம்? 13

*பொருள்* - தந்தை தாய் மக்கள் உடன்பிறந்தார் யாவரும் பொய்யெனச் சிந்தையில் எண்ணி மனத்தில் உள்ள மயக்கத்தை அறுப்பது எக்காலம்?

மன்உயிரைக் கொன்று வதைத்து உண்டு உழலாமல்
தன்உயிர்போல் எண்ணித் தவம்முடிப்பது எக்காலம்? 14

*பொருள்* - நிலைபெற்ற பல உயிர்களை வதைத்துக் கொன்று அதனை உண்டு உழலாமல் அவற்றைத் தன் உயிர்போல் எண்ணித் தவத்தை முடிப்பது எக்காலம்?

பாவிஎன்று பேர்படைத்துப் பாழ்நரகில் வீழாமல்
ஆவிஎன்ற சூத்திரத்தை அறிவதுஇனி எக்காலம்? 15

*பொருள்* - படுபாவி என்று பலர் சொல்லும் படியான பேர்படைத்துப் பாழான நரகத்தில் விழாமல் உயிர் என்ற ஒரு சூத்திரத்தை நான் அறிவது எக்காலம்?

உளியிட்ட கல்லும் உருப்பிடித்த செஞ்சாந்தும்
புளியிட்ட செம்பும் பொருளாவது எக்காலம்? 16

*பொருள்* - உளியினால் உடைபட்ட கல்லும் உருவழிந்த செஞ்சாந்தும் புளியினால் துலக்கிய செம்பும் நல்ல பொருளாவது எக்காலம்? உளிபட்ட கல் சிலையாக வேண்டும் செஞ்சாந்து உருவமாக வேண்டும் புளி கொண்டு துலக்கிய செம்பு ஒளியுடன் விளங்க வேண்டும்.

வேடிக்கையும் சொகுசும் மெய்ப்பகட்டும் பொய்ப்பகட்டும்
வாடிக்கை எல்லாம் மறந்திருப்பது எக்காலம்? 17

*பொருள்* - நாம் காணும் வேடிக்கை விநோதங்களும் மெய்யான ஆடம்பரமும் பொய்யான ஆடம்பரமும் ஆகியவற்றை வாடிக்கையாய்க் காணும் அனைத்தையும் மறந்திருப்பது எக்காலம்?

பட்டுடை பொற்பணியும் பாவனையும் தீவினையும்
விட்டுவிட்டு உன்பாதம் விரும்புவதும் எக்காலம்? 18

*பொருள்* - பட்டாடை அணிவதையும் பொன்னால் ஆகிய அணிகலன்களை அணிவதையும் நல்லவன் போல் நடிப்பதையும் விட்டு விட்டு இறைவா! உன் திருவடியை அடைவது எக்காலம்?

ஆமைவரும் ஆள்கண்டு ஐந்தடக்கம் செய்தாற்போல்
ஊமை உருக்கொண்டு ஒடுங்குவதும் எக்காலம்? 19

*பொருள்* - ஆமை தன் ஐந்து உறுப்புக்களையும் அடக்கி வருதல் போல

ஒருவன் வருதல் கண்டு அவன் போலவே ஐம்புலன்களையும் அடக்கி ஆமையைப் போலாகி ஒடுங்கி நான் இருப்பது எக்காலம்?

எக்காலக் கண்ணி 231 கண்ணிகள். இறைவனை நாடி இருப்பது எக்காலம் என்பதாகப் பாடுகின்றார் பத்திரகிரியார். அத்தனாகிய இறைவன் இருப்பிடத்தை ஆராய்ந்து உலக இன்பங்களைத் துறந்து அவனைச் சிந்திக்கும் காலம் என்று வரும்? எத்தனையோ யுகங்களைக் கடந்து வெண்ணீறு அணிந்து வீடுபேற்றை அடைவது எக்காலம் என்று புலம்புகிறார். அமரர் வாழ நஞ்சை அருந்தி அம்பலத்தில் ஆடும் தொண்டருக்குத் தொண்டனாய் இருக்கும் இறைவனுக்குத் தொண்டு செய்வது எக்காலம் என்ற ஏக்கம் உள்ளவராய்ப் புலம்புகின்றார். வேதாந்த விசாரங்களை விட்டு ஏகாந்தமாயத் தனித்திருந்து தவம் செய்வது எக்காலம் திருமால் பன்றி உருக்கொண்டு பூமியைத் தோண்டியும் இறைவன் திருவடியைக்காண இயலாதவாறு குன்றில் இட்ட விளக்கின் ஒளிபோல் விளங்குபவனைக் காண்பது எக்காலம்.

தித்திக்கும் தேனாகவும் அமுதமாகவும் விளங்குவானைச் சித்தாந்தத்து உட்பொருளை முத்திக்கு வித்தை நான் நினைப்பதுவும் எக்காலம் என்ற ஏக்கம் தொனிக்கின்றது. கஞ்சா அபின் முதலியனவற்றை அருந்தும் செயலை விட்டொழித்துப் பஞ்சாமிர்த்தைப் பருகுவது என்ற வினாவும் அவருடைய ஏக்கமாக உள்ளது. போதை மயக்கத்தில் சில சாதுக்கள் உலகத்தில் இருப்பதை எண்ணி நானும் அவர்களைப் போல் இல்லாது நிறை நினைப்போடு இருக்கும் தன்மையைப் பத்திர கிரியார் விரும்புகின்றார். அடுத்துப் பிறர்பால் சென்று வயிற்றுக்கு இரை தேடும் வாழ்வையும் வெறுக்கின்றார்.

உப்பிட்ட பாண்டம் இவ்வுடலில் உள்ள மறுபடி கருக்கொள்ளு முன்னே கங்கையைச் சடையில் சுமந்த சிவனை வணங்கும் காலம் என்றோ என்ற எண்ணம் அவருக்கு இருந்துள்ளது. ஆதார மூலமாகிய கணபதியின் பாத தாமரையைப் பணிகின்ற காலம் என்று பேசுகிறார். இறைவனை அடைதல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட தன்மை அவர் பாடிய இந்தப் புலம்பலில் வெளிப்படுவதைக் காணலாம். அடுத்து நாம் காண இருப்பது அகப்பேய்ச் சித்தரின் சிந்தனைகள்.

*(தொடரும்...)*

# வள்ளலாரின் ஒளி வழிபாடும் ஒப்பற்ற பெருநலப் பெருவாழ்வும்

(பேராசிரியர். புலவர் ஆறு.மெ. மெய்யாண்டவன்)

இந்த உலகில் உயர் பிறப்பாக மனிதப் பிறப்பு எடுத்தும் உயிரினம் யாவும் ஒன்றெனக்கருதாது இனத்தின் பெயராலும் சமயத்தின் பெயராலும் ஒருவரோடு ஒருவர் முரண்பட்டுப் போரிட்டு மடிவதைக்கண்டு இரக்கம் கொண்ட முழுமுதற் பொருளாகிய எல்லாம் வல்ல அருட்பெருஞ்சோதி ஆண்டவர் உயிரினத்தவர் யாவரும் ஓரினத்தவரே என்பதை உலகிற்கு உணர்த்த வள்ளல் பெருமானை இவ்வுலகிற்கு அனுப்பி அவர் மூலமாக நமக்குச் சுத்தசன் மார்க்கம் எனும் பொது நெறி காட்டினார்.

இந்த சன் மார்க்க நெறியின் ஈடற்ற இலட்சியம் எத்துணையும் பேதம் கருதாது ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர்வரை அன்புகாட்ட வேண்டும் என்பது தான். அதனால் தான் தன் அருட்பா ஒன்றில் அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே என்றார்.

இறைவன் பேரொளிப் பிழம்பாய் விளங்குகிறான். அதையே அருட்பெருஞ்சோதி என வள்ளலார் விளக்குகிறார்.

எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த மாணிக்க வாசகர் மூன்று வகையான ஒளி வழிபாட்டுச் சிந்தனைகளை நமக்கு அருளி உள்ளார். ஒளி வழிபாட்டின் வளர்ச்சி நிலையைக் கூறும் போது சோதியே சுடரே ஒளி விளக்கே எனப்பாடி உணர்த்துகிறார். சோதி எனும் சொல் அனைத்துப் பொருள்களையும் பெரு வெளிச்சத்தில் காட்டும் பேரொளியாகவும் சுடர் என்பது ஓர் எல்லைக்கு உட்பட்ட நிலையில் விளங்குவதாகவும் விளக்கு என்பது மக்கள் வீட்டில் கோயில்களில் ஏற்றி வழிபடும் நிலையையும் விளக்குவதாகவும் அமைகிறது.

ஆக, பேரொளி, சுடர், விளக்கு என மூன்று நிலைகள் உள்ளன. வள்ளலார் இவ்வனைத்தையும் ஒன்றாக்கி அருட்பெருஞ்சோதி என ஒருமைப்படுத்துகிறார். இதற்கும் மணிவாசகப்பெருமானே வள்ளலார்க்கு அடியெடுத்துக்கொடுக்கிறார். திருவெம்பாவை

முதற்பதிகத்தில் ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியை என அடியெடுத்துக் கொடுக்கிறார். வள்ளலார் அரும்பெரும் சோதியை அருட்பெருஞ்சோதி ஆக ஆக்கி ஒளிவழிபாடே அத்துணை சமயங்களையும் ஒருங்கிணைக்கும் வழிபாடு என உணர்த்துகிறார்.

பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய திருவிசைப்பாவின் முதற்பாடலின் முதல்வரி ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே என்பது தான். பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய பெரியபுராணம் முதற்பாடலில் சேக்கிழார் அலகில் சோதியன் என இறைவனை வாழ்த்துகிறார்.

**திருவருட்பாவில் அறிவியல் சிந்தனை**

ஒளியை ஒலியாக மாற்ற முடியும் (Light Energy can be converted into sound energy) எனும் புதியதொரு அறிவியல் கூறு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அதன் அடிப்படையில் வளர்ந்ததே இன்றையப் பேசும் படம் (Talkies). இந்த உள்ளீட்டு உண்மையை எளிமையாக அக்கச்சி எனும் பாடலில் வள்ளற் பெருமான் வானத்தின் மீது மயிலாடக் கண்டேன், மயில் குயிலாச்சுதடி என்கிறார். மயில் குயில் ஆதல் எப்படி? மயில் ஒளி வடிவம் என்பதை அகத்தால் உணர்ந்து மகிழ்கிறார் வள்ளலார்.

தாம் ஒளி உடம்பு பெற்றதைப் பின்வரும் திருவருட்பா வெண்பாவில் விளக்குவது சிந்தனைக்கு உரியது.

**ஊன் உடம்பை ஒளி உடம்பாய் ஓங்கிநிற்க**
**ஞான அமுதெனக்கு நல்கியதே வானப்**
**பொருட் பெருஞ்சோதிப் பொதுவில் விளங்கும்**
**அருட்பெருஞ்சோதி அது.**

வானப் பொருட்பெருஞ் சோதியே அருட்பெருஞ்சோதி என்பது பொருள். வான வெளியாம் பொருட்பெரும் ஒளியே எனக்கு அருட்பேரொளி எனும் அருட்பெருஞ்சோதி என வள்ளலார் விளக்குவது போற்றுதற்கு உரியது.

ஒளி ஒன்றே அண்ட பகிரண்டம் எலாம் விளங்கி ஓங்குகின்றது எனக் கூறுகிறார் வள்ளற் பெருமான்.

எல்லாச் சமயங்களும் முழுதற் பொருள் ஒளிவடிவானது என்றே கூறின. அப்பொருள் கருணை வடிவானது எனவும் கூறின. இவ்வுண்மையைச் சமயங்களின் பெயரால் மாறுபட்டுக்கிடக்கும்

சமுதாய மக்களுக்கு உணர்த்தும் வகையில் சமரச சுத்த சன்மார்க்கம் எனும் பெருநெறியை வகுத்தார். இப்பெருநெறியை இவ்வுலகம் பெற்றுச் சாதி சமய மோதல்கள் இல்லாச் சமுதாயமாக மலரட்டும். அன்பும் கருணையும் எங்கும் பரவட்டும்.

## பட்டினத்தார் பைந்தமிழ் - 18

தமிழாகரர் தெ. முருகசாமி

(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

பதினோராம் திருமுறையில் உள்ள பட்டினத்துச் சுவாமிகளின் ஐந்து பனுவல்களில் திரு ஒற்றியூர் ஒருபா ஒருபஃதும் ஒன்று. இத்திரு ஒற்றியூரே பட்டினத்தாரின் ஜீவ சமாதி உள்ள இடமாகும். திரு ஒற்றியூரை நினைத்தமாத்திரத்தில் நினைப்புக்கு வருவது பட்டினத்தாரின் பெருநினைப்புத்தான்,

பேய்க் கரும்பு எங்கே தித்திக்கின்றதோ அங்கே முத்தி என அசரீரி மூலம் வரம் பெற்ற பட்டினத்தார்க்கு இத்திருவொற்றியூரில் பேய்க்கரும்பு தித்தித்ததால் இங்கேயே தங்கிவிட்டார்.

தினசரிதம் தியான தரிசனத்தில் ஒற்றியூர்த் தியாகேசப் பெருமானை மௌனமாய் அனுபவித்து ஜீவ சமாதியானார். தாம் வாழும் போதே கண் காணி இல்லா இடம் இல்லை என்றாற்போலத் திரு ஒற்றியூர்ப் பெருமானை எல்லாமாய் அனுபவித்ததைப்பற்றுதலோடு பத்துப் பனுவல் பாடிப் பாமாலை சாற்றினார், அப்பனுவலே திருஒற்றியூர் ஒருபா ஒருபஃது என்பதாகும்.

பல்வேறு பாவகை சேர்ந்ததாகப்பாடும் பனுவல் போல் இல்லாமல் ஆசிரியப்பா என்ற ஒரே வகையில் பாடப்பட்ட பனுவல் என்பதால் ஒருபா என்றும் அது பத்துப்பாக்களைக் கொண்டதால் ஒருபா ஒருபஃது என்றும் பெயர் பெற்றது. கதம்பமாகப் பாடாமல் ஒரே பாவகையால் பத்துப்பா பாடியதில் பட்டினத்தாருக்குத் தனிச்சிறப்புண்டு. அதுவும் ஒற்றியூர் என்ற திருத்தலத்தில் பாடியதாலும் தனித்த பெருமை பெற்றதாக உள்ளது. பத்து என்ற சொல் கணிதத்தின்படி பத்து என்ற (10) எண்ணைக் குறிக்கும். ஒன்று முதல் ஒன்பது வரையான எண்கள் ஒரே எழுத்துவடிவமாய் இருக்க இப்பத்து மட்டுமே ஓரெழுத்தாய் இல்லாமல் ஒன்று என்றதுடன் சுழியம் (வட்டம் - ஜீரோ) என்ற பூஜ்யம் எழுதப்பட்ட இருகுறியாக உள்ளது.

இந்தச் சுழியம் ஒவ்வொருபத்தின் அடையாளமாக (20,30,40) எழுதப்படும். இப் படிச் சுழியமும் எண்ணும் இணைந்து நிற்கும் போது ஓர் உண்மை தத்துவமாக உணரப்படுமாறுள்ளது. எழுதப்படும் எண்ணிற்கு இடப்புறமாகப் இடம்பெறும் சுழியம் மதிப்புடையது. வலபுறம் எழுதப்பெற்றால் மதிப்பில்லை.

எடுத்துக்காட்டாக, 10 - பத்து என்ற எண்ணிக்கையாகும். 01 - என்றால் ஒன்று என்றதையே உணர்த்தும். இதனால் மதிப்பில்லாத பூஜ்யம் எண்ணைச் சாரும் இடவகையால் சிறப்பும் சிறப்பின்மையும் பெறும் எனத் தெரிகிறது. இந்த அடிப்படையில்தான் முற்றும் துறந்தவராகிய பட்டினத்தார் ஒருபற்றும் அற்றவராக இருந்தாலும் ஒற்றியூரை ஒற்றிக்கொண்ட போது அவருக்கு அபரஞானம் கழன்று பரஞானம் உள்ளத்துள் சுழன்றதால் ஜீவசமாதியால் உயர்ந்தார். அந்த அனுபவ வெளிப்பாட்டுண்மைகளைப் பாடல்களாக மலர்த்தி இறையடியடைந்தார். இதில் ஒன்று இறைவன், சுழியம் ஆன்மா.

அதனால் தான் அவர் இந்த ஒருபா ஒருபஃதுப் பாடலின் ஒவ்வொன்றிலும் ஓத உலவா ஒற்றியூர என்றே விளித்துப் பாடினார்.

ஓத - என்பது ஓதுதற்கு என்றும் உலவா என்பது அழிந்து படாத என்றும் பொருள்படும். என்றும் ஓதுதற்குரிய அழியாப் பொருள் என்பது பொதுவான கருத்தானாலும் இதற்கும் மேலான தொரு நுண்பொருளும் உண்டு எனத் தெளியலாம்.

ஓத உலவா என்பது ஓதம் உலவா என்றதன் மறுவடிவமாகும். ஓதம் என்பது ஈரப்பதமான நீர் என்றும் உலவா என்பது வற்றாத என்றும் பொருள்படும். கடல் நீர் என்றும் வற்றாதது என்பதால் கடல் போல் வற்றாத பெருங்கருணையான இறைவா நீயோ பெருந்தகையாளன் (HERO) நானோ சிறியன் (ZERO) சிறியனாகிய நான் உன்னைச் சேர்ந்ததால் தகுதி பெற்றேன் என்ற குறிப்பின் ஆழமான பொருளில் தான் ஒருபா பஃது என்ற தலைப்பு அமைந்துள்ளது. ஏனைய பனுவல்களில் அந்தந்தத் தலத்து இறைவனையே புகழ்ந்து தன்னைக் காட்டிக் கொண்ட பட்டினத்தார் திருவொற்றியூரில் தன்னை இறைவனோடு ஐக்கியப்படுத்திக் கொள்ளும் குறிப்பிற்கான இடம் என்பதையே பஃது (பத்து) என்ற எண்ணின் வடிவத்தில் பாடினார். அதாவது ஒன்றுடன் பூஜ்யம் சேரும் போது பூஜ்யம்

பெருமையடைவதாவது இறையோடான ஐக்கியக் குறிப்பாகும் எனலாம்.

ஆக ஓத உலவா ஒற்றியூர் என்பது புகழ்ச்சியால் முற்றுப் பெறாமல் வளர்ந்து கொண்டே இருக்கும் ஊர் என்பது அங்குள்ள இறைவனும் ஆன்மாவை ஐக்கியப் படுத்திக் கொள்ளும் உயிர்த்துணைவன் என்பதுமான இருவேறு நிலையில் பட்டினத்தாரின் அனுபவப் பாடலாக உள்ளதே திருவொற்றியூர் ஒருபா ஒருபஃதாகும் எனலாம்.

இக்கருத்துகளின் தொடர்ச்சியில் மேலும் ஒன்றைக் கருதலாம். மணிவாசகர் இறைவனிடத்தில் தன்னை ஒற்றிவை விற்றுக்கொள் என வேண்டினார்ப் போலப் பட்டினத்தார் இவ்வொற்றியூர்த் தலத்தில் தன்னையே இறைவனிடத்தில் ஒற்றி வைத்துப் பின் அவ்விறைவனுக்கே விற்பனையாகிவிட்டார் (ஐக்கியம் ஆகிவிட்டார்) என்றாலும் தகும் எனலாம்.

மேற்கண்ட ஆன்மீகக் குறிப்புகளுடன் பாடிய திருவொற்றியூர் ஒருபா ஒருபஃ தான பனுவலின் பாடல்களை முறையாகக் காணலாம். முதற்பாடல் இறைவனின் பேருருவைக் கூறுகிறது. அறுவகைச் சமயமோடு ஏழுலகாகி என்கிறார் பட்டினத்தார். இரண்டாம் பாடலில் ஒற்றி மாநகர் உடையோய்! அவ்வவர்க்கு அவ்வவை ஆகி எனச் சமயங்கடந்த நிலையைக் கூறுகிறார். மூன்றாம் பாடலில் தொல்புகழ் ஒற்றியூர! ஆள் வினை யெல்லாம் நின்றுழிச் செறிந்தநின் செயல் என ஆன்மாக்களின் வினைபற்றிப் பரக்கப் பேசுகிறார்.

நான்காம் பாடலில் ஒற்றியூர! மன்னிய வேலையுள் வான்திரை போல, நின்னிடை எழுந்து நின்னிடை ஆகி என ஆன்மாக்கள் நின்னில் தோன்றி ஒடுங்குவதைக் கடலின் அலைகள் தோன்றிக் கடலிலேயே ஒடுங்குவது போல என்ற உவமையால் கூறினார். ஐந்தாம் பாடலில் பன்னிய பெரும் புகழ் ஒற்றியூர! செய்வினை உலகினில் செய்வோய் எனினும் அவ்வினைப் பயன் நீ எனக் கூறியது செய்வினையும் செய்வானும் அதன் பயனும் கொடுப்பானும் இறைவனே என்ற சேக்கிழாரின் கருத்துக்கு இணையாக உள்ளது.

ஆறாம் பாடலில் அது அவள் அவன் என நின்றமையார்க்கும் பொது நிலையான் என உணர்த்திய பொருளே எனப் பட்டினத்தார் இறைவனின் சாத்திர நிலையை - மெய்கண்டார் அவன், அவள், அது எனும் அவை மூவினைமையின் எனச் சிவஞான போதத்தில் கூறியதற்கு முன்பே கூறியது சிந்தனைக்குரியதாகும்.

ஏழாம் பாடலில் வையம் முழுதும் நின்வழி எனப்படுமே எனக் கூறுவதால் இறைவனின் வியாபக நிலை உணரப்படுகிறது. எட்டாம் பாடலில் பட்டினத்தார் தம் குலத்தொழிலுக் கேற்பக்கடல் வாணிபத்தை உவமையாக்கிக் கூறுவது சிறப்பாக உள்ளது. மனதை ஆட்டிப் படைக்கும் ஐம்புல நுகர்வுகளால் அமைந்த உடலாகிய படகு - வாழ்க்கைக் கடலில் பயணிக்கும் போது துய்ப்பு என்னும் நீர்ச்சுழியில் சிக்காமல் நற்சிந்தனை என்னும் கூம்பில் பயணம் செய்கையில் ஆசாபாச பாறையில் மோதாமல் சிவபூசையாம் ஆலங்கரை ஒளியில் அருள் என்னும் கரை ஏறவேண்டும் என்பதாகக் கூறப்பட்டுள்ளது.

9ஆம் பாடலில் ஒற்றியூர! என்னிடைப் பிறந்த இன்னாப் புன்மொழி நின்னை அணுகா ஆதலின் தாய் சேய் உறவில் என்னைக் காப்பாய்! நானோ சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலச் சேர்க்கையால் தளர்வுறாமல் காப்பாய் என்கிறார் பட்டினத்தார்.

இறுதியான பத்தாம் பாடலில், ஒற்றிமாநகர் உடையோனே! உன்னை உனது மெய்ப் புகழால் போற்றி அருச்சிப்பன் எனத் தமிழ் அருச்சனைக்குரிய வகையில் சிவனே போற்றி! மறையோய் போற்றி! சந்திர போற்றி! இந்திர போற்றி! அமரா போற்றி! குமரா போற்றி என ஏத்துதற் குரியை என்பதாகப் பாடியுள்ளார்.

இப்படியாகப் பட்டினத்தார் சிதம்பரம், சீர்காழி திருவிடைமருதூர் என்னும் திருத்தலப் பாடல்களைப் பல்வேறு வகைகளால் பாடினாலும் இந்தத்திரு வொற்றியூர் பனுவலை மட்டும் ஒரே வகையான பாவால் பாடிப் பரவினார். இவை நான்கும் போல் அல்லாமல் அடுத்து வரும் திருஏகம்பம் உடையார் திருவந்தாதி எனும் பனுவலின் நூறு பாடல்களையும் அகப்பொருள் நிலையில் பெரும்பாலும் பாடப்பட்டதோடு சிவபெருமான் தங்கியுள்ள 86 திருத்தலங்கள் பற்றிய குறிப்புடன் பாடப்பட்டுள்ளதைக் காண்போமாக!

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### துறவு
### (பற்றினை விடுதல்)

1. **யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்.**

யாதனின் யாதனின் - எந்தெந்தப் பொருளிலிருந்து; நீங்கியான் - எவனொருவன் நீங்கியிருக்கின்றானோ; நோதல் - துன்பப்படுதல்; அதனின் அதனின் இலன் - அந்தந்தப் பொருள்களினால் இலனாவான்.

எந்தெந்தப் பொருள்களிலிருந்து எவனொருவன் நீங்கியிருக்கின்றானோ அவன் அந்தந்தப் பொருள்களினால் வரும் துன்பம் இல்லாதவனாவான்.

2. **வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்**
**ஈண்டுஇயற் பால பல.**

வேண்டின் - பேரின்பம் வேண்டினால்; உண்டாகத் துறக்க - அவை உண்டாவதற்கேற்ற காலத்தில், துறக்க வேண்டும்; துறந்தபின் - அவ்வாறு துறந்த பின்னால்; ஈண்டு இயற்பால பல - இப்பிறவியின்கண் இயல்பாக அமையும் பேரின்பங்கள் பலவாகும்.

பேரின்பம் வேண்டினால் அவை உண்டாவதற் கேற்ற காலத்தில் துறக்க வேண்டும். அவ்வாறு துறந்தால் இப்பிறவியின்கண் இயல்பாக அமையும் இன்பங்கள் பலவாகும்.

3. **அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்**
**வேண்டிய எல்லாம் ஒருங்கு.**

அடல்வேண்டும் - கெடுத்தல் வேண்டும்; ஐந்தன் புலத்தை - ஐம்பொறிகளின் உணர்வுகளை; விடல்வேண்டும் - விட்டுவிட வேண்டும்; வேண்டிய எல்லாம் ஒருங்கு - புலனடக்குதற்கு வேண்டிய எல்லாவற்றையும் ஒருங்கே.

ஐம்பொறிகளின் உணர்வுகளைக் கெடுத்தல் வேண்டும்; அதற்கு வேண்டிய எல்லாவற்றையும் ஒருங்கே விட்டுவிட வேண்டும்.

**4. இயல்புஆகும் நோன்பிற்கு ஒன்று இன்மை உடைமை**
**மயல்ஆகும் மற்றும் பெயர்த்து.**

இயல்பு ஆகும் – இயல்பு ஆகும்; நோன்பிற்கு – தவம் செய்வதற்கு; ஒன்று இன்மை – பற்றுள்ள ஒருபொருளும் இல்லாமை; உடைமை – ஏதேனும் ஒன்று உடையராய் இருத்தல்; மயல் ஆகும் – மயக்கம் தரும்; மற்றும் பெயர்த்து – மறுபடியும்.

தவம் செய்வதற்கு எந்த ஒருபொருளின் மீதும் பற்று இல்லாமை தான் இயல்பாகும்; ஏதேனும் ஒன்று உடையராய் இருந்தால் மறுபடியும் அது மயக்கம் தருவதாகும்.

**5. மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்புஅறுக்கல்**
**உற்றார்க்கு உடம்பும் மிகை.**

மற்றும் தொடர்ப்பாடு என்கொல் – மறுபடியும் பொருள்களின் மேல் தொடர்பு ஏற்படுதல் எதற்காக? பிறப்பு அறுக்கல் – பிறவிநோயை நீக்கல்; உற்றார்க்கு – மேற்கொண்டவர்க்கு; உடம்பும் மிகை – அவர்தாங்கிய உடம்பும் மிகையாகும்.

பிறவி நோயை நீக்கல் மேற்கொண்டவர்க்கு அவர் தாங்கிய உடம்பும் மிகையாகும். எனவே மறுபடியும் பொருள்களின் மேல் தொடர்பு ஏற்படுதல் எதற்காக? தேவை இல்லையாம்.

**6. யான்எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்.**

யான் எனது என்னும் செருக்கு – யான் என்றும் எனது என்றும் கருதும் செருக்கினை; அறுப்பான் – நீக்குபவன்; வானோர்க்கு உயர்ந்த உலகம் – வானோர்க்கும் அடைதற்கரிய உயர்ந்த வீடுபேறு; புகும் – புகுவான்.

யான் என்றும் எனது என்றும் கருதும் செருக்கினை நீக்குபவன் வானோர்க்கும் அரிதான வீடுபேற்றுலகினில் புகுவான்.

**7. பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்**
**பற்றி விடாஅ தவர்க்கு.**

பற்றி விடாஅ இடும்பைகள் - துன்பங்கள் பற்றிக் கொண்டு விடமாட்டா; பற்றினை - இவ்வுலகப் பற்றினை; பற்றி விடாஅ தவர்க்கு - பற்றிக்கொண்டு விடாமல் இருப்போர்க்கு.

இவ்வுலகப் பற்றினைப் பற்றிக் கொண்டு விடாமல் இருப்போர்க்குத் துன்பங்கள் பற்றிக் கொண்டு விடமாட்டா.

**8. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர்.**

தலைப்பட்டார் தீரத் துறந்தார் - முற்றிலும் துறந்தவர்கள் வீடுபேற்றின் தலைப்பட்டார்; மயங்கி வலைப்பட்டார் - மயங்கிப் பிறப்பின் வலைப்பட்டார்; மற்றையவர் - துறவாதார்.

முற்றிலும் துறந்தவர்கள் வீடுபேற்றை அடைவார்; துறவாமல் மயங்கியவர் பிறப்பின் வலைப்படுவர்.

**9. பற்றுஅற்ற கண்ணே பிறப்புஅறுக்கும் மற்று**
**நிலையாமை காணப்படும்.**

பற்று அற்ற கண்ணே - ஒருவன் உலகப்பற்றை விட்ட பொழுதிலேயே; பிறப்பு அறுக்கும் - பிறவித் துன்பம் நீங்கும்; மற்று - பற்று நீங்காத போது; நிலையாமை காணப்படும் - இவ்வுடம் பின் நிலையில்லாத் தன்மை உணரப்படும்.

ஒருவன் உலகப்பற்றை விட்ட பொழுதிலேயே பிறவித் துன்பம் நீங்கும்; பற்று நீங்காத போது இவ்வுடம்பின் நிலையில்லாத் தன்மை உணரப்படும்.

**10. பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு.**

பற்றுக - பற்றிக் கொள்க; பற்றற்றான் பற்றினை - பற்றில்லாத இறைவன் மீது கொண்ட பற்றை; அப்பற்றை - அந்தப் பற்றை; பற்றுக பற்று விடற்கு - வேறு உலகப் பற்றினை விடுவதற்குப் பற்றிக் கொள்க.

பற்றில்லாத இறைவன் மீது கொண்ட பற்றினைப் பற்றிக் கொள்க; வேறு உலகப் பற்றினை விடுவதற்கு அந்தப் பற்றினைப் பற்றிக் கொள்க.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## மாயப் பசுவை வதைத்தது

அனந்தகுண பாண்டியனால் அபிசார ஹோமப் பாம்பு துண்டிக்கப்பட்டதும் அதனைத் தொடர்ந்து வந்த சமணர்கள் எல்லாரும் மனம் கவன்று ஓடினர். ஓடிச் சென்ற சமணர்கள் எல்லாரும் ஒரு இடத்திலே மறுபடியும் கூடினர். ஆலோசிக்க ஆரம்பித்தனர். நாம் முன்பு அனுப்பிய யானையைப் போலவேதான் இந்த நாகமும் நாசமாயிற்று. இனி எதனை ஏவலாம்? என்று சிந்தித்தனர். நாம் இந்த முறை பசு மாட்டை ஏவி விடுவோம்; பசுவை யாரும் வதை செய்ய மாட்டார்கள் ஆதலால் பசுவை ஏவி விடுவதே சிறந்த உபாயமாகும் அப்படியே செய்வோம் என்று முடிவு செய்தார்கள் அதன் விளைவாக ஹோமகுண்டத்திலிருந்து பசுவின் உருவம் தாங்கிய அரக்கன் ஒருவன் தோன்றினான். அரக்கப் பசுவை மதுரையின்மீது ஏவி விட்டார்கள் சமண குரவர்கள்.

ஏவப்பட்ட பசு காற்றினைக் காட்டிலும் அதி வேகமாக மதுரையை நோக்கி வந்து கொண்டிருந்தது. வரும் வழியிலெல்லாம் நாசம் செய்தது. பல உயிர்களைக் கொன்று குவித்தது. வெறியுடனும் வெற்றியுடனும் மதுரை நகருக்கருகே வந்தது. பாண்டியனும் மதுரை நகரச் சான்றோர்களும் திருக்கோயிலை அடைந்தார்கள். சோமசுந்தரேசா ! அனாதரட்சகா ! ஆபத்பாந்தவா ! இது முறையோ? இது தகுமோ? இது அழகோ? இது அழகோ? என்று கதறி முறை செய்தார்கள். கடவுள் பக்தர்களின் உள்ளக் கிடக்கையை உணர்ந்தார். உடனே திருவருள் பெருகத் தமது ரிஷப நந்தியை அழைத்தார். ஏ ரிஷபமே! நீ சென்று சமணர்கள் ஏவிய கோரப் பசுவைக் கொன்று வருவாயாக என்று ஆணையிட்டருளினார்.

ரிஷப நந்தியும் யமனே பயப்படும் வண்ணம் கோபம் கொண்டு எழுந்தது. அதன் கண்கள் தழல் தெறித்தன, காலடிகளிலே புழுதி

கிளம்பியது. பேராரவாரம் செய்து கொண்டு மாயப் பசுவைத் தாக்க விரைந்து நடந்தது. பசுவைக் கண்டதும் உக்கிரமாக அதனை முட்டி வெருட்டியது. எல்லாத் திசைகளிலும் பசுவை விரட்டி அலைக்கழித்தது. களைத்துப்போன அப்பசுவைத் தனது கொம்புகளால் வயிற்றிலே குத்தியது கொம்புகளாலே ஏந்தி வீசியது. ரிஷபம் பல படியாக வீரப் போர் புரிந்தது. பெருந் தாக்குதலுக்கு உட்பட்ட பசு பலமிழந்து விழுந்து தன் உயிரை விட்டது. பசுவின் உடல் விழுந்த இடத்திலேயே ஒரு மலை உருவம் பெற்று விட்டது.

அதனைக் கண்ட மதுரை மக்கள் அனைவரும் பெருமகிழ்ச்சி அடைந்தனர். பாண்டியனின் தோள்கள் பூரித்தன. மதிகெட்ட சமணர்கள் அனைவரும் பெருத்த வெட்கமடைந்து புறங்காட்டி ஓடினர்.

உலக மக்கள் தெரிந்து கொள்ள நல்ல சான்றாக விளங்குமாறு ரிஷப நந்தி தனது ஸ்தூல சரீரத்தை அங்கேயே விட்டு விட்டது. அந்த உடல் ரிஷப மலையாகி விட்டது. பின்னர் தனது சூக்ஷ்ம சரீரத்துடன் சொக்கநாதனிடம் சென்றது. பெருமான் அருள் புரிந்து அதற்கு முன்னைய வடிவத்தை அருளினார்.

நகரமாந்தரும் அனந்தகுண பாண்டியனும் மிகுந்த சந்தோஷம் அடைந்து சிவ சன்னிதானத்தில் இருந்த நந்திகேசுவரை வணங்கிச் சென்றனர். சோமசுந்தரப் பெருமானும் நந்தியாரின் வீரத்தையும் வெற்றியையும் பற்றி மீனாட்சியம்மையாரிடம் இனிதே சொல்லி வீற்றிருந்தார்.

நாட்கள் சென்றன. அனந்தகுண பாண்டியனுக்குக் குலபூஷணன் தோன்றினான். அரசாட்சிப் பொறுப்பைத் தன் மைந்தனிடத்திலே தந்து விட்டு அனந்தகுணன் சிவபுரம் சென்றான்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் “திருநெல்லை”**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)

(அரசு அனுமதி பெற்றது)


**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**


**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

## B.Sc. Visual Communication.,

(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

**திரைக்கதை, வசனம் எழுதுதல்,**
**ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,**
**இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்**
**போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!**